# தேசோபகாரி.

2. பெப்ருவரி மீ, 1894-ஸு.



பானகர் நாட்டு மகாராஜா அவர்கள்.

Vol. xxxiv. No. 2.





## THE MAHARAJAH OF BHAUNAGAR.

### பானகர் நாட்டு மகாராஜா அவர்கள்.

பானகர் நாடு 2860 சதுர மைல் விஸ்தீரணம் கொண்டது. அதனுடைய ஜனத்தொகை சுமார் 4 இலட்சம். அந்நாட்டு அரசிறை 34 இலட்சத்து 78 ஆயிரம் ரூபாய். கத்தியவார் நாடுகளில் அது மிகவும் விசேஷம் பொருந்தியதாயும், இந்தியாவில் செம்மையாய் அரசாளப்பட்டு மிகவும் புரோகதியடைந்துவரும் நாடுகளில் ஒன்றாயும் இருக்கிறது. தானியதவசம், பருத்தி, உப்பு முதலியவைகளே அதன் முக்கிய விளைவாதிகள். எண்ணெய், பித்தளை, செம்பு இவைகளால் உண்டுபண்ணப்படும் பாத்திரங்கள், துணி இவைகளே அங்குள்ள வியாபாரச் சரக்குகள். செம்மையான ரோட்டுகளும், 117 60 மைல் புகைவண்டிப் பாதையும் அங்குண்டு. அதில் பள்ளிக்கூடங்களும், அவைகளில் படிக்கும் 6238 மாணுக்கரும் உண்டு.

தற்காலத்தில் பானகர் நாட்டு அரசனுயிருக்கும் தக்கர் சாகிப் 1858-ம் வருஷத்தில் பிறந்தவர். ராஜ்கோட்டு என்னுமிடத்து கல்லூரியில் கல்வி பயின்றவர். இவரது பால்லிய பருவத்தில் ராச்சிய பரிபாலனம் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர் ஒருவராலும், நாட்டுக்கார உத்தியோகஸ்தர் ஒருவராலும் நடத்தப்பட்டுவந்தது. தற்காலத்து மகாராஜா அவர்கள் மெச்சிக்கொள்ளப்படத்தக்க விதமாய் அரசு முறை நிர்வகித்துவந்ததையிட்டு, 1881-ல் கே. ஸி. எஸ். ஐ. பட்டமும், 1886-ல் ஜி. ஸி. எஸ். ஐ. பட்டமும் அவருக்குச் சூட்டப்பட்டது. சாமானிய ஜனங்களுக்குப் பிரயோஜனமான புகைவண்டிப் பாதை முதலியவற்றை இவர் மிகவாய் விர்த்திபண்ணியிருக்கிறார். லண்டன் மாநகரியில் சில மாசங்களுக்குமுன் ஓர் முக்கிய ஸ்தாபன பிரதிஷ்டை மகோற்சவத்துக்குக் கூடின முக்கியஸ்தர்களில் இவ்வரசரும் ஒருவரே. இந்திய சக்கரவர்த்தினி அவர்களும் இவர் நேருக்கு விசேஷ கவனம் செலுத்தினார்கள். லண்டன் பட்டணத்திலிருக்கும் போது இவர் நன்றாய் உபசரிக்கப்பட்டதுமல்லாமல், வெகு கண்ணியமாயும் நடத்தப்பட்டார்.

இது நிற்க, பின் வருபவை சமீப காலத்தில் பிரசுரமான லண்டன் பத்திரிகை ஒன்றில் காணப்படுகிறது:—

இந்தியாவின் ஸ்திதி முன்னுக்கு வருகிறதென்பதைச் சுதேச அரசரது கல்வி அபிவிர்த்தி வெளிப்படையாய்க் காட்டுவதுபோல், வேறென்றும் காட்டமாட்டாது. முற்



காலத்தில் இந்நாட்டுப் பிரபுக்கள் அந்தர்ப்புர சாலைகளில் தங்கள் இளமைப் பருவத்தைக் கழிக்கவோ, விளையாட்டுக்காரரான கூட்டாளிகளோடே காடுமேடாய்த் திரியவோ செய்வார்கள். தற்காலத்திலோ படிக்கப் பிராயமானவுடனே அவர்கள் ராஜ குமாரர் காலேஜுக்கு அனுப்பப்பட்டு, இங்கிலாந்திலுள்ள எந்தப் பிரபுவின் பிள்ளைக்கும் கிடைக்கத்தக்க கலாப்பியாசமடைகிறார்கள்.

இந்துதேசத்தில் ராஜ குமாரருக்கென்று ஏற்படுத்தியிருக்கும் பாடசாலைகளில் எல்லாம் கத்தியவார் நாட்டில் ராஜகோட் என்னும் ஸ்தலத்தில் ஸ்தாபிதமாயிருக்கும் காலேஜ் மிகவும் விசேஷம் பொருந்தியது. 1871-ம் வருஷம் அம்மாகாணத்து அரசர்களது உதாரத்துவத்தால் அது ஸ்தாபிக்கப்பட்டுத் தற்காலம் இந்தியா முழுவதிலும் பிரக்கியாதை பெற்றுவருகிறது. தற்காலம் இங்கிலாந்தைப் பார்த்துப்போக வந்திருக்கும் பானகர் நாட்டு மகாராஜா அவர்களும் மேற்படி காலேஜில் கல்வி பயின்று பேர்பிரஸ்தாபமானவர். இந்தக் கலாசாலையில் இவ்வரசரே முதன்முதல் படிக்கப்போனவராம். இவரது முன்மாதிரியே கத்தியவார் நாட்டு அரசர் தங்கள் குமாரருக்கு இங்கிலிஷ் அறிவைப் புகட்ட முக்கிய ஏதுவாயிற்று. காலேஜை இவர் விட்ட பிற்பாடும் அது விஷயமாய் அதிக சிரத்தை எடுத்துக்கொண்டேவருகிறார். தமது சொந்தக் குமாரரையும் அங்கே படிக்கும்படியாக அனுப்பியிருப்பதுமன்றி, மேற்படி ஸ்தாபன சம்பந்தமான வருஷாந்தக் கூட்டங்களிலும் பிரத்தியக்ஷ தரிசியாயிருந்து உதவி புரிகிறார். இவரது விசேஷ நன்கொடைகளே இக்கலாசாலையின்பேரில் இவருக்கிருக்கும் விருப்பத்தை விளக்கிக் காட்டுகிறது. 10,000 பவுன் செலவு செய்து, மேற்படி ஸ்தாபனத்தோடே இன்னோர் கட்டடத்தைச் சேர்த்திருக்கிறார். சில வருஷங்களுக்குமுன் அங்குள்ள மாணுக்கரும் பழைய மாணுக்கரும் சேர்ந்து, இவ்வரசனுக்கு வந்தனோபசாரப்பத்திரம் ஒன்று சமர்ப்பித்துக்கொடுத்தார்கள். கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலை சம்பந்தமாய்ச் சமீபகாலத்தில் இவ்வரசனுக்கு எல். எல். டி. பட்டமும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

---

**உள்ளும் புறம்பும் ஒற்றுமை வேண்டும்.** வாயிலே தேனும் வாலிலே கொடுக்குமுள்ள தேனீக்கள் போல, உதட்டிலே உறவும் உள்ளிலே பகையும், கையிலே ஜெபமாலையும் கக்கத்திலே கன்னக்கோலும், கழுத்திலே தாழ்வடமும் கருத்திலே கரவடமுமாய், வேலைக்குத் தக்க வேஷம் பூண்டுகொண்டு வாசா ஞானிகளாய்த் திரியாமல், உள்ளும் புறம்பும் ஒத்திருக்கவேண்டும்.

THE OLD MAN CRUCIFIED.

## பழைய மனுஷனைச் சிலுவையிலறைதல்.

"நம்முடைய பழைய மனுஷன் அவரோடேகூடச் சிலுவையில் அறையப்பட்டதென்று அறிந்திருக்கிறோம்."
ரோமர் 6 : 6.

விசுவாசி ஒவ்வொருவனும் இரண்டு மனுஷராயிருக்கிறான். அந்த இரண்டு மனுஷரும் முதலாம் ஆதாமாகிய ஆதி மனுஷனும் இரண்டாம் ஆதாமாகிய கிறிஸ்துவுந்தான். இதைத் தெளிவாய்ச் சொன்னால் ஒவ்வொரு கிறிஸ்தவனுடைய ஆத்துமாவிலும் முதல் மனுஷனுடைய தீய சுபாவமும், இரண்டாம் மனுஷனுடைய நல்ல சுபாவமும் வாசம்பண்ணுகிறது என்னலாம். முதல் மனுஷனுடைய சுபாவம் என்ன? அது நமது பெற்றோரிடத்திலிருந்து நமக்குச் சுதந்தரமாய்க் கிடைத்த ஜென்ம பாவமும், மாமிச சிந்தையும், தீய நோக்கங்களுந்தான். இரட்சகரை விசுவாசித்து மறு ஜென்மம் அடைந்தவர்களுக்குள்ளே இந்தத் தீமைகள் இருக்குமா? இதை வாசிக்கிற சிநேகிதனே, நீ இவ்விஷயத்தைப்பற்றி உன் யோசனைப்படி தர்க்கிக்காமல், சாதனைப்படி தற்சோதனை செய்வாயாக. "தேவனால் பிறந்த எவனும் பாவம் செய்யான்" என்ற வாக்கியம் மனுஷன் மறு ஜன்மமடைந்தபின் வழக்கமாய் ஆசையோடு பாவஞ்செய்வதில்லை என்று பொருள்படுமேதவிர, அவன் கனவிலும் நனவிலும் பாவத்தை நினையாமல் தேவனுக்குச் சமானமாய் பூரண பரிசுத்தனாயிருக்கிறான் என்று அர்த்தப்படாது. இரண்டாம் மனுஷனுடைய சுபாவம் என்ன? அது பரிசுத்த ஆவியினால் அவன் ஆத்துமாவுக்குண்டாகிற விசுவாசமும் பாவ வெறுப்பும் மறுபிறப்புந்தான். அந்தப் புதுச் சுபாவமானது அதற்குக் காரணரான தேவனைப்போல புனிதமாயிருக்கிறது. நெருப்புப் பொறி சூரியன் நேருக்குப் பறப்பதுபோல, அது எப்போதும் அதின் காரணராகிய தேவனை நோக்கிச் செல்லுகிறது. அதினுடைய ஆசையும், நோக்கமும், சார்பும் தேவனையும் பரிசுத்தத்தையும் பற்றினதாதலால், சகல விதமான தீமையையும் அது பகைத்துத் தள்ளுகிறது. ஆனால் இப்படி தீமையை வெறுத்து நன்மையை விரும்பும்போது, பழைய ஆதாமினுடைய சுபாவமானது அதோடு போருக்கு வருகிறபடியால், அது மிகவும் துக்கப்பட்டு: "ஓ நிர்ப்பந்தமான மனுஷன் நான்; இந்த மரண சரீரத்தினின்று யார் என்னை விடுதலையாக்குவார்" என்று அழுது புலம்புகிறது. இது மாத்திரமல்ல. புதிய சுபாவமாகிய அந்தப் புண்ணிய குணத்திற்கும் பழைய சுபாவமாகிய பாவ குணத்



திற்கும் தாவீதுக்கும் சவுலுக்கும் விரோதம் உண்டானதுபோலவும், இஸ்ரவேலருக்கும் சபிக்கப்பட்ட கானானியருக்கும் யுத்தம் எழும்பினதுபோலவும், பெரிய விரோதமும் சண்டையும் நடந்து வருகிறது. ஆனால் விசுவாசியானவன் தன் பழைய மனுஷன் கிறிஸ்துவோடுகூடச் சிலுவையிலறையப்பட்டதாய்க் காண்பதுந்தவிர, தானும் பரிசுத்த ஆவியானவருடைய உதவியால் அதைக் குருசிலறைந்து முற்றும் கொன்றுவிட முயற்சி செய்கிறான்.

I. நமது பழைய மனுஷனுடைய மரணத்திற்கும் கிறிஸ்துவின் சிலுவை மரணத்திற்குமுள்ள ஒற்றுமையைச் சிந்திக்கலாம்.

இரட்சகர் மனசாரச் சிலுவையிலறையுண்டார். "ஒருவனும் அதை என்னிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளமாட்டான்; நானே அதைக் கொடுக்கிறேன்" என்று அவர் தமது ஜீவனைக் குறித்துச் சொல்லியிருக்கிறார். அவருக்கு மனமானால் சிலுவையிலிருந்து இறங்கித் தமது சத்துருக்களுக்குத் தப்பிப்போகலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யாமல், மனசார மரித்தார். சிநேகிதனே, நாமும் நமது பாவங்களை மனசாரச் சிலுவையிலறையவேண்டும்; அதாவது அவைகளை மனசார முற்றும் வெறுத்துத் தள்ளவேண்டும். சில மனுஷர் தங்கள் பாவங்களை விடும்போது அவைகளைச் சமூலம் விட்டுவிடாமல், நாய் தன்னுடைய கக்கலுக்குத் திரும்புவதுபோலவும், கழுவப்பட்ட பன்றி சேற்றுக்குத் திரும்புவதுபோலவும், மறுபடியும் அவைகளைச் செய்யலாமென்கிற நோக்கத்தோடிருக்கிறார்கள். லோத்தின் மனைவியைப்போல அவர்கள் சோதோமைவிட்டுப் புறப்பட்டும், அவர்கள் கண்ணானது அவர்கள் இருதயமிருக்கிற இடத்திற்கு நேரே போகிறது. குடிவெறியினால் உத்தியோகம் போய்விடும், சுகம் குன்றிப்போகும் என்கிற நோக்கத்தோடு மாத்திரம் மதுபானத்தை விடுகிறவர்கள் எத்தனை பேர்! மனுஷருடைய நாவுக்கும், சீர நோவுக்கும் மாத்திரம் பயந்து கற்பாய் நடக்கிறவர்கள் எத்தனை பேர்! பூனையானது தான் திருடின இறைச்சியின் சூடு பொறுமல் அதைத் தரையிலே போடுவதுபோல, அவர்கள் தங்கள் பாவங்களைச் சிலகாலம் நீக்கிவைக்கிறார்கள். ஆனால் மாம்சம் சூடாறினவுடன் பூனை அதைப் போய் கவ்வுகிறதுபோல், அவர்கள் பாவம் செய்கிறதினால் சரீரத்திற்கும் பேருக்கும் மோசமில்லை என்று காணும்போது அதிலே அஞ்சாமல் விழுவார்கள். அப்படிப்பட்டவர்கள் ஓர்பாள் என்பவள் மோவாப் தேசத்தைவிட்டு நீங்கினதுபோல மாத்திரம் தங்கள் பாவங்களை விட்டு விலகுகிறார்கள். ஆனால் அவள் தன் விக்கிரக தேசத்திற்குத் திரும்பினதுபோல அவர்

களும் சீக்கிரம் தங்கள் பாவங்களுக்குத் திரும்புவார்கள். மேலும் நடனசாலையில் விளையாட்டிற்கு ஒருவரோடொருவர் போர் செய்வதுபோல, தங்கள் பாவங்களுக்கு விரோதமாய்ப் போலிச் சண்டை பண்ணுகிறவர்களாயிருக்கிறார்கள். ஆனால் சகோதரரே நாம் நம்மைத் தீண்ட வருகிற சர்ப்பத்தை எப்படி பகைக்கிறோமோ, நம்மைக் கொல்ல வருகிற கொள்ளைநோய்க்கு எப்படி அஞ்சி விலகுகிறோமோ, அப்படியே பாவத்தைப் பகைத்து அதற்கு அஞ்சி விலகவேண்டும். மனசாரத் தீமையைத் தள்ளவேண்டும். நமது சரீரத்திற்கு என்ன துன்பம் வந்தாலும், நமது பொருளுக்கு என்ன நஷ்டம் வந்தாலும், நாம் மரிக்கவேண்டியது வந்தாலும், பாவத்திற்கு இடங்கொடாமல் முழுமனசோடு அதை எதிர்த்து நிற்கவேண்டும்.

**இரட்சகருடைய சிலுவை மரணமானது வேதனையுள்ளதாயிருந்தது.** அவர் பட்ட அடிகளும், காயங்களும், மன நோவுகளும் இத்தன்மையுடையனவென்று ஒருவராலும் யோசிக்கவும் சொல்லவும் முடியாது. அவர் அடைந்த வேதனை மிகவும் பெரிதென்று யாவரும் ஒப்புக்கொள்வார்கள். நமக்குள்ளே வாழ்கிற பாவங்களைச் சிலுவையிலறையும் விஷயத்திலும் நமக்குப் பெரிய வருத்தமிருக்கிறது. சிலர் தங்களுக்குள்ளே கிரியைசெய்கிற பாவங்களைக் கொல்லுமுன்னே என்ன பாடெல்லாம் படுகிறார்கள்! எத்தனை பகலாய், எத்தனை இரவாய், எத்தனை வாரமாய், எத்தனை மாசமாய், வருந்திக் கண்ணீர் சிந்திப் பெருமூச்சுவிட்டு வேதனைப்படுகிறார்கள். அருமையான அங்கங்களாகிய வலது கண்ணையும் வலது கையையும் பிடுங்கித் தறித்து அரிந்து சேதிப்பது இலகுவா? மேலும் நமது கடந்த காலத்துப் பாவத்தை நினைக்கும்போதும், வருங்காலத்திலும் ஒரு வேளை பாவத்தில் விழுந்துவிட்டால் அது எவ்வளவு துன்பத்தைப் பிறப்பிக்கும் என்பதை யோசிக்கும்போதும், நமது மனம் அடைகிற வேதனை எவ்வளவோ கொடிதாயிருக்கிறது. நமது பாவம் மிகுந்த வேதனையின் பேரிலேதான் சாகக் கூடியதாயிருக்கிறது. நூறு சிரசுடைய சருநாகமாகிய பாவத்திற்கு அநேக ஜீவன்களுண்டு; ஆதலால் அது அதிகமான வேதனையடைந்துதான் மரிக்கும். ஓ, யேசுவே எங்கள் பாவங்களை வதைப்பது எங்களுக்கு வருத்தமாயிருந்தாலும், நீர் இரங்கி நாங்கள் அவைகளை எப்படியும் சிலுவையில் அறைந்து கொன்றுவிட எங்களுக்கு உதவிசெய்தருளும்.

**இரட்சகருடைய சிலுவை மரணம் யாவரும் காணக்கூடியதாயிருந்தது.** யேசுகிறிஸ்து பாடுபட்டதையும் சிலுவையில் அறையுண்டதையும் மரித்ததையும் யாவரும் கண்டார்கள். அதுபோல நாம்



நமது பாவங்களைக் குருசிலறைந்துவிட்டோம் என்பது நமது ஜீவியத்தில் தெளிவாய் விளங்கவேண்டும். வேலைக்காரர் சோம்பல்காரரும் உண்மையற்றவர்களுமாயிருந்தும், நாங்கள் எங்கள் பாவங்களைச் சிலுவையில் அறைந்துவிட்டோம் என்பது வீண். எசமான்மார் ஊழியக்காரரிடத்தில் அநீதியும் குரூரமுமுள்ளவர்களாயிருந்தும், நாங்கள் எங்கள் பாவங்களைச் சிலுவையில் அறைந்துவிட்டோம் என்பது வீண். வியாபாரிகள் பொய்விலை கூறி, தராசையும் நிறையையும் மாற்றி, ஜனங்களை வஞ்சிக்கிறவர்களாயிருந்தும், நாங்கள் எங்கள் பாவங்களைச் சிலுவையில் அறைந்துவிட்டோம் என்பது வீண். ஒருவனைக் காண்கிறவர்கள்: இவன் காரியம் குழப்பம் என்று சொல்லக்கூடியதாயிருக்க, அவன் நான் என் தோஷங்களைத் தொலைத்துவிட்டேன் என்று சொல்வதில் யாதொரு நன்மையும் இல்லை. பிரியமானவர்களே நீங்கள் பாவத்தை விட்டுவிட்டீர்கள் என்பது யாவருக்கும் துலாம்பரமாய்த் தெரியட்டும். குடிவெறியும், பொய்யாணையும், குரூரமும், கற்புக்கேடும், சூரிய வெளிச்சத்திலே யாவரும் காணத்தக்கதாகப் பரசியமாய்க் குருசிலே ஆணியறையப்படவேண்டும். அல்லாமலும் கிறிஸ்துவின் சிலுவை மரணம் மெய்யானதும் நிந்தை நிறைந்ததுமாயிருந்ததுபோல, நம்முடைய நமது பாவங்களை உண்மையும் தாழ்மையுமாய் சங்காரஞ் செய்ய முயற்சிக்க வேண்டும்.

II. **நமது பழைய சுபாபம் கிறிஸ்துவோடுகூடச் சிலுவையில் அறையப்படுகிறதென்பதைத் தியானிக்கலாம்.** கிறிஸ்துநாதர் விசுவாசிகளுடைய பிரதிநிதி. அவர் மரித்தபோது விசுவாசிகள் யாவரும் அவரோடுகூட மரித்தார்கள். கிறிஸ்துவின் மரித்த சரீரமானது சிலுவையில் அறையப்பட்ட நமது பழைய மனுஷனுக்கு அறிகுறியாயிருக்கிறது. என்றைக்குக் கிறிஸ்து மரித்தாரோ அன்றைக்கு நமது பழைய மனுஷனும் ஒருவாறு மரித்தான் என்னலாம். இந்த உபதேசம் மிகவும் அழகும் ஆச்சரியமுமானது. அதை விபரிக்க இடம் போதாது. ஆனாலும் சில சங்கதிகளைச் சுருக்கிச் சொல்லுகிறோம். நமது பாவங்கள் மரிக்கவேண்டுமானால் அவைகள் யேசுவோடுகூடத்தான் மரிக்கவேண்டும். சிலுவைக்கு அப்பாலே நின்றுகொண்டு இருதயத்திற்குள்ளிருக்கிற ஒரு சிறு பாவத்தையாவது கொல்லலாம் என்று நினைக்கவேண்டியதில்லை. அன்பான சகோதரனே, இரட்சகருடைய காயங்களை உன் விசுவாசமாகிய உளளக் கண்ணினாலே நோக்கிப் பார்; உணர்வோடும் உருக்கத்தோடும் நோக்கிப் பார்; அவர் பரிசுத்த மேனியிலிருந்து திருரத்தமானது தாரை தாரை

யாய்ப் பாய்கிறதைப் பார். ஓ, நீ அப்படி பார்ப்பாயானால் அவரை நேசிக்கத் துவக்குவாய்; அவரை நேசிக்கத் துவக்குவாயானால் பாவத்தை வெறுப்பாய். பாவத்தை வெறுத்து அதற்கு இடங்கொடாதிருப்பதுதான் பழைய மனுஷனைச் சிலுவையில் அறைவது என்று அறிந்துகொள். அன்றியும் நீ அவரை நோக்கும்போது, அவர் உன்னை நோக்கி, நீ உன் பாவங்களைக் குருசிலறையும்படி உனக்கு உதவிசெய்வார். கிறிஸ்துவின் உதவியினாலன்றி நீ உன் பாவங்களை மேற்கொள்ளலாம் என்று நினையாதே. நாம் சீக்கிரம் மரித்துப்போவோம் என்கிற விஷயத்தைச் சதாப்பொழுதும் சிந்திக்கிறதினாலே, பாவத்தை ஜெயிக்கலாம் என்று சிலர் நினைக்கிறார்கள். வேறு சிலர் கிறிஸ்துவின் பரிசுத்த இலட்சணங்களை இடைவிடாமல் தியானிப்பதினால் பாவத்தை வெல்லலாமென்று யோசிக்கிறார்கள். அந்த யோசனைகள் அவ்வளவு தீமையானவைகளல்ல. ஆனால் பழைய மனுஷனைக் கொல்வதற்கேற்ற பலமான வழி கிறிஸ்துவின் சிலுவையண்டை விரைந்து செல்வதுதான்.

**கடைசியாய் இந்தச் சங்கதியிலிருந்து நாம் நமது பாவங்களோடு போர்செய்யத் தீர்மானிக்கவேண்டும்.** பழிக்குப் பழிவாங்குவது பாவமாயினும், கிறிஸ்துவைக் கொன்ற பாவத்தோடு போர்செய்து அதைக் கொன்று பழிவாங்குவது புண்ணியமாயிருக்கிறது. சாமுவேல் ஆகாகைக் கண்டதுண்டமாய் வெட்டிப்போட்டதுபோல உங்கள் பாவங்களைத் துண்டித்துவிடுங்கள். உன் சர்வ சத்துருக்களிலும் கொடிய சத்துருவாயிருக்கிற பாவமாகிய பாம்பைப் பால் வார்த்து வளர்க்காதே. அதைப் பிடித்துக் கிறிஸ்துவோடு சிலுவையில் அறைவாயாக; இன்றைக்கே அறைவாயாக. நண்பனே நீ உன் பழைய மனுஷனைச் சிலுவையிலறையவில்லையானால் அவன் உன்னை இவ்வுலகத்திலும் நரகத்திலும் சிலுவையில் அறைவான் என்பதை மறந்துவிடாதே. போர்க்களத்திலே இருவர் போர்புரிந்தால் யாராவது ஒருவன் சாகவேண்டுமல்லவா? ஒன்றில் உன் பாவம் சாகவேண்டும், இல்லாவிட்டால் நீ சாகவேண்டும். ஐயோ, அன்பானவனே வீணிலே கெடாதபடி யேசுகிறிஸ்துவை அடுத்தடுத்துச் செல். அவர் நீ உன் பாவங்களை அவரோடுகூடச் சிலுவையில் அறையும்படி உனக்கு உதவிபுரிவார். தேவன் இந்த வார்த்தைகளை ஆசீர்வதிப்பாராக.

---

**பொய்யை ஸ்தாபித்தல்.** ஒரு பொய்யை ஸ்தாபிக்க அநேக பொய்ச்சாட்சிகளைக் கொண்டுபோகுதல், அஸ்திபாரமில்லாத சுவருக்கு அநேக முட்டுக் கொடுப்பது போலிருக்கிறது.



## CUTHBERT'S FAITH.

## குத்பெர்ட்டு என்பவரின் நம்பிக்கை.

குத்பெர்ட்டு என்பவர் பெரிய பிரித்தானியாவில் ஆரம்பத்திலே கிறிஸ்து சமயத்தை ஏற்றுக்கொண்டவர்களுக்குள் ஒருவர். உலகம் கொடுக்கக்கூடாத மேலான காரியங்களையிட்டு இளப்பத்திலே அவருக்குண்டாயிருந்த நாட்டமும், பயபத்தியான ஜீவியம்பண்ணவேண்டுமென்ற தீர்மானத்தால் ஏவப்பட்டு அதற்கென்று தம்மை ஒப்புக்கொடுத்து ஏழை ஜனங்களினிடையில் பிரயாணஞ்செய்து சத்தியத்துக்குச் சாக்ஷியாய்த் திரிந்ததும், அவருக்குச் சொல்லரிய கஷ்டங்களையும் வருத்தங்களையும் கொண்டுவந்தது. இதெல்லாம் அவர் கடவுளுடைய சீஷனாய் இருந்தார் என்று காட்டும்.

"மனிதர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு பரலோகத்திலிருக்கிற உங்கள் பரம பிதாவை மகிமைப்படுத்தும்படி, உங்கள் வெளிச்சம் அவர்கள் முன்பாக பிரகாசிக்கக்கடவது" என்னும் கட்டளையை வெளிப்படையாய் காட்டும்பொருட்டாகவே குத்பெர்ட்டு என்பவர் ஜீவித்தார்.

அவ்வந்தகாரமான காலத்தில் அவர் அங்கும் இங்கும் அலைந்துதிரியும்போதுண்டான பலவித விபத்துகள் விக்கினங்களிடையிலும் தேவன் பேரில் அவருக்கிருந்த நம்பிக்கை சற்றேனும் அசைக்கப்படவேயில்லை. ஆட்சஞ்சாரமற்ற அவாந்தர காடுகளிலிருக்கும் சமைபத்திலும் அநேகந்தடவை அவர் இருட்டுக்குள் அகப்பட்டுக்கொண்டதுமுண்டு.

ஏகாந்தமான ஓர் இடத்தில் ஏழை ஜனங்களுக்குப் பிரசங்கித்துப்போட்டு, சாயுங்காலம் திரும்பி வரும்போது ஒரு காட்டுக்குள்ளே வந்து சேர்ந்தார். அப்போது பசியும ஆயாசமும் அவரை மேற்கொண்டது. தளாச்சையாய்த் தரையில் அவர் விழும்போதும், கடவுளை உண்மையாய்ச் சேவிப்பவன் பசியினால் சாகமாட்டான் என்று தமக்குள் சொல்லிக்கொண்டார். அதே சமயத்தில் தலைக்கு மேலாய்ப் பறந்துபோன கழுகு, பெரிய மீன் ஒன்றைத் தாழே போட்டுவிட்டது. அது குத்பெர்ட்டு என்பவரின் பாதத்தினருகில் விழுந்தது. எவ்வளவோ நன்றியுணர்ச்சியோடு அதை அவர் எடுத்துத் தமது பசியைத் தீர்த்து, தம்மை நம்புகிறவர்களைத் தேவன் ஒருபோதும் கைவிடாமல் அவர்களுக்கருகாண்மையில் இருக்கிறார் என்னும் உணர்ச்சியோடு அங்கே இளைப்பாறியிருப்பார் என்று எண்ணலாம்.

இது ஓர் சிறிய சம்பவமாயினும், இதைச் சற்றுச் சிந்திப்



குத்பெர்ட்டு என்பவர்.



பது நமக்குப் பிரயோஜனத்தைத் தரக்கூடியதே. குத்பெர்ட்டு என்பவருக்குண்டாயிருந்த வருத்தங்களைப் பார்க்கிலும் மிகவும் லேசான துன்பங்கள் நமக்கு நேரிடும்போது; நம்பிக்கையற்றவர்களாய்க் கலக்கத்துக்கும் பீபத்துக்குமுள்ளாகிறோம்.

ஆபத்தான வேளையில் கர்த்தரை நம்பு. உனக்காக கவலைப்படுகிற அவர் பேரிலே உன் பாரத்தையெல்லாம் போடு.

## THE AUTOBIOGRAPHY OF A HANDBILL.

## ஒரு கைப்பத்திரிகையின் சரித்திரம்.

1868-ம் ௵ நான் இங்கிலாந்தைச் சேர்ந்த பர்மிங்ஹாம் என்னும் நாட்டிலிருக்கிற ஒரு காருகசாலையில் கந்தைத்துணி முதலியவைகளால் கடுதாசியானேன். என்னோடு உண்டாக்கப்பட்ட காகிதச் சுருள்கள் அநேகம் உலகத்தின் நாலு பாகங்களுக்கும் போக, நானும் இன்னும் பல சுருள்களும் ஒரு கட்டாகச் சென்னபட்டணத்திற்கு வந்து, அங்கிருந்து திருவிதாங்கோட்டை அடைந்து, அவ்விராச்சியத்தில் நாகர்கோவில் அச்சுக்கூடத்திலே ஒரு அறையிலிறங்கியிருந்தோம். இப்படி 2 வருஷமாயிருக்கும்போது, 1870-ம் ௵ நான் இருந்த கட்டை அவிழ்த்து, என்னையும் என்னோடிருந்த வேறு கடுதாசிகளையும் எடுத்து அச்சடிக்கும்போது, வானம் பிரகாசமான நட்சத்திரங்களால் நிறைந்திருப்பதுபோல, நான் மனுஷருடைய ஆத்துமாக்களைப் பிரகாசிப்பித்துச் சிறப்பிக்கிற எழுத்துக்களாகிய உடுக்களால் நிறையும் பெரும் சிலாக்கியத்தைப் பெற்றேன். இவ்வாறு நான் அட்சர தாரகைகள் அடைந்தது 1870-ம் ௵ மே மீ; என் இலக்கம் 34; என் பெயர் "நற்காலச் சித்தர் பாடல்" (*The Good Time*); என்னை இயற்றினவர் நெய்யூர் சங். எம். ஞானாபரணம் ஐயர்; அவர் இப்போது பரலோகத்திலிருக்கிறார்; நான் ஒரு கலிதத்துறையோடு ஆரம்பித்து ஆனந்தக் களிப்பாக 13 கவிகளடங்கியிருக்கிறேன். என்னையும் என்னோடுள்ள வேறு பத்திரிகைகளையும் அச்சடித்து அச்சுக்கூடத்திலே அடுக்கி வைத்திருக்கும்போது, ஒரு நாள் காலஞ்சென்ற சங். என். தேவதாசன் என்னும் பிராமண நாட்டையர் அச்சுக்கூடத்திற்குள்ளே மிகுந்த ஆவலோடு பிரவேசித்தார். அவர் முகத்தில் விளங்கின ஆவல் கோடைகாலத்திலே மானானது ஆற்று நீரைத் தேடும்போதும், குளிர் காலத்துப் பசியை ஆற்ற அன்னந் தேடும்போதும், பண்டிகையிலே ஏக புத்திரனைத் தப்பவிட்ட தாய்

அவனைத் தேடும்போதும் எவ்வளவு ஆவல் காண்பிப்பார்களோ, அவ்வளவுக்கு அதிகமாயிருந்தது. அவர் அப்படி தாபந்தத்தோடு வருவதற்குக் காரணம் என்ன என்பது, அப்போது அச்சுக்கூடத்து தயிற்றராயிருந்த மேஸ்தர் கண்ணுடி வி. சாமுவேல் என்னும் வித்தியாகரனோடு அவர் பேசினதினுலே விளங்கும். அவர் மேற்படியாரைப் பார்த்து: ஐயா, என் கையிலிருந்த பத்திரிகைகளெல்லாம் செலவாகிப்போயிற்று. ஆதலால் நேற்று என் புத்தியேற்பாட்டை ஏட்டோய்க் கிழித்துச் சுசீந்திரத்திலே (ஒரு இந்து கிராமம்) அநேகருக்குக் கொடுதேன். அறிவில்லாமல் சாகிற ஜனங்களைப் பார்த்துக்கொண்டு நாம் சும்மா நின்ருல் போதுமா? அல்லது இரண்டு வார்த்தையைச் சொல்லி அனுப்பிவிட்டால் போதுமா? அவர்கள் நன்ருய்க் கவனிக்கத்தக்கதாக ஏதாவது கையில் கொடுக்கவேண்டியது அவசியமாயிருக்கிறது. கொஞ்சம் கைப்பத்திரிகை தாரும் என்று கேட்க, மேஸ்தர் சாமுவேல் ஓடிப்போய் எனக்கு முந்தின 33மது இலக்கமாகிய "நல்ல செய்தி," அதற்கு முந்தின 31-ம் 32-ம் இலக்கங்களாகிய "கிறிஸ்து நாதரின் சிநேகச் சிறப்பு," "தேவ குமாரனின் திருநாமங்கள்" முதலியவைகளில் வகைக்கு நூற்றைம்பது பிரதியும், "நற்காலச் சித்தர் பாடல்" என்னும் என்னுடைய ஜாதியில் முன்னூறு பிரதியும் எடுத்துக்கொண்டுவந்து அவரிடத்தில் கொடுத்தார். எங்களைக் கையில் வாங்கினபோது ஐயருடைய முகமானது தண்ணீரைக் கண்ட தை மாசத்துப் பயிர்போலவும், சந்திரனால் சுருங்கின செந்தாமரை சூரியனைக் கண்டு சோபித்து விரிவதுபோலவும் மகிழ்ச்சியினுல் இலங்கி விளங்கினது. ஐயர் நேரே எங்களை வீட்டுக்குக் கொண்டுபோய், உள்ளே பிரவேசித்தவுடன், தமது பத்தினியை ஆயி என்று அழைக்கவும், அந்த அம்மாள் ஓடிவந்தார்கள். வரவும்: ஆயி சாப்பாடு கொண்டுவா என்று சொல்ல, அவர்கள்: ஐயா இன்னும் எட்டடிக்கவில்லை; சாதம் ஆகிவிட்டது; கறி அடுப்பிலிருக்கிறது; 15 மினிற்றுக்குள் ஆகிவிடும் என்று சொன்னார்கள். ஐயர்: நேரம் பிந்திவிட்டது ஆயி; சோறும் உப்பும் ஊறுகாயும் கொண்டுவா. திருப்தியாய்ச் சாப்பிட்டுவிடுகிறேன் என்க, அம்மாள்: சறி இரண்டு நிமிஷத்திற்குள் ஆகிவிடும் ஐயா என்று மொழிந்துவிட்டு மடப்பள்ளிக்கு ஓடினார்கள். உடனே ஐயர்: ஆயி சுசீந்திரத்திற்குப் போகிறேன்; சாயுந்தரம் வருவேன் என்று சொல்லிக் கொண்டு குடையை எடுத்தார். எடுக்கவும் அம்மாள் ஐயா நில்லுங்கள். நீங்கள் கேட்டபடி ஊறுகாயும் சாதமும் கொண்டுவருகிறேன் என்று சொல்லிக், கொண்டுவந்து கொடுத்தார்கள். ஐயர் இதுவரை



யும் பத்திரிகைகளாகிய எங்களைத் தமது கையிலேதான் வைத்திருந்தார். சாதம் வந்தவுடன் எங்களை ஒரு மேசையில் வைத்துவிட்டுச் சாப்பிட்டு எழுந்து ஒரு சிறு ஜெபம்பண்ணி எங்களையும் எடுத்துக் கொண்டு சுசீந்திரத்திற்குப் புறப்பட்டார்; புறப்பட்டுப் போகும் வழியில் அநேகரிடத்திலே பேசி அவர்களுக்குப் பத்திரிகை கொடுத்தார். கோட்டாற்றைச் சமீபித்தவுடன் ரங்கையன் என்னும் ஒரு பிராமண வாலிபன் பத்திரிகை வாங்குவதற்கு விருப்பமுள்ளவனைப்போல வந்து, ஐயரிடத்தில் ஒரு பத்திரிகை கேட்டான். அவர் என்னை அவனுக்குக் கொடுத்தார். அவன் என்னை வாங்கினவுடன் "நற்காலம் நற்காலம் இதுவே, பண்டு நாதீக்கள் மூதாக்கள் நன்குற நாடிய நற்காலம் நற்காலம் இதுவே" என்று பல்லவியை கூடிநின்ற யாவரும் கர்ணானந்தம் அடைந்து களிப்புறத்தக்கதாகவும், குயில்களும் கிளிகளும் நாணத்தக்கதாகவும் மகா மதுரமாய்ப் பாடினன். அப்போது ஐயருக்குண்டான ஆனந்தத்தை ஆராலும் அறையமுடியாது. அந்த அந்தண இளைஞனுடைய உதடு பழஞ் சொரிந்ததே ஒழிய, அவனுடைய உள்ளம் தீ யெரிந்துகொண்டிருந்ததென்பதை அவர் அறியவில்லை. ஆனல் சீக்கிரம் அறிந்துகொண்டார். எப்படியென்றால் அவ்வாலிபன் அவரை நோக்கி: ஐயா பெரியவரே, கீழ்ஜாதிக் காரர்தான் கிறிஸ்து மதத்தை ஏற்றுவருகிறார்கள். நீர் பிராமணன் அல்லவா? உமக்கேன் இந்தப் பித்தம்பிடித்தது. போனதெல்லாம் போகட்டும்; இனி காசிக்குப் போய்த் தீர்த்தமாடி புலையைப் போக்கிப் பிராமணனுகும் என்ருன். அப்போது கூடி நின்ற யாவரும் கேகே என்று சத்தமிட்டுச் சிரித்தார்கள். ஐயர் அவனுக்கு மறுமொழிகொடுக்க வாயைத் திறக்குமுன் அந்தக் கூட்டத்தில் நின்ற வேதநாயகம் என்னும் ஒருவர் அந்தப் பார்ப்பானைப் பார்த்து: நீர் பிராமணனல்லவா என்க, அவன் ஆம் என்ருன். உடனே அவர், பிராமணனுடைய ஜாதித் தொழில் என்னவென்று வினவ, அவன் வேதமோதல் என்று விடை பகர்ந்தான். மற்ற மூன்று வருணத்தாரின் தொழில் என்ன என்று சோதிக்க, சத்திரியருக்குப் பூபாலனமும், வைசியருக்கு வாணிபமும், சூத்திரருக்குத் தொண்டும் தொழில் என்ருன். மறுபடியும் அவர்: பிராமணன் ஏனைய ஜாதியாருடைய தொழில்களைச் செய்யலாமா என்று கேட்கவும், அவன்: செய்யலாகாது; அப்படி செய்கிற பிராமணன் தான் செய்கிற தொழிலுக்குத் தக்கதாய் ஜாதியிலே தாழ்ந்துபோவான் என்று சாஸ்திரமிருக்கிறது என்ருன். உடனே அந்த வித்வசிரோமணி: உமக்கு வேலை என்னவென்று அந்தப் பிராமணனைக் கேட்க, அவன் மாறுத்

தரம் சொல்லாமல் பொந்துக்குள் அகப்பட்ட ஆந்தல்போல் விழிக்கத் துவக்கினன். ஏனென்றால் அங்கு நின்ற அநேகருக்கு அவன் வியாபாரி என்று தெரியும். அவன் தன் தொழிலைச் சொல்வானால் அவனை முடுக்கி முடுக்கி இந்தப் பொந்துக்குள் கொண்டுவந்த வேதநாயகம் என்பவர் சாஸ்திரப்படி அவனை வைசியன் அல்லது செட்டியாக்கிவிடுவாரென்று பயந்திருந்தான். காரியமும் அப்படித்தான். அவர் அவனைப் பார்த்து: நீர் வியாபாரியல்லவா? ஆதலால் உம்மை அந்தண குலத்தான் என்றழைப்பதெப்படி? நீர் மட்டுமல்ல, உம்மைப்போன்ற எண்ணுக்கடங்காத பிராமணர்கள் வேதமோதுவதற்குப் பதிலாய் கோடு கச்சேரிகளிலே சட்டம் ஓதுவதும், யாகத்திற்கு நிலத்தை உழுவதற்குப் பதிலாய் கிருஷிக்கு நிலத்தை உழுவதும், நைவேத்தியத்திற்குரிய பதார்த்தங்களைச் சேகரிப்பதற்குப் பதிலாய் வியாபாரத்துக்குச் சாமான்களைச் சேகரிக்கிறதும் வழக்கமாகிவிட்டது. ஆதலால் சாஸ்திர விதிப்படி நீங்கள் வேதியருக்குத் தகாத விதமாய் நடப்பதேதவிர, இதோ இங்கே நிற்கிற தேவதாசன் ஐயர் அப்படி நடக்கிறதில்லை என்பது விசிதமாயிருக்கிறது. ஏனென்றால் அகோராத்திரம் அவருக்கு வேதம் ஓதுதலே வேலையாயிருக்கிறது. ஆதலால் அவர் காசிக்குப் போகவேண்டியதில்லை; நீரும் உம்மைப்போன்ற வேறு பிராமணர்களும்தான் காசி ஸ்நானத்திற்குப் போகவேண்டியது என்றார். இதைக் கேட்ட யாவரும் முன்னைவிட அதிகமாய் அட்டதிசையும் செவிடு படும்படி அட்டகாசம் பண்ணினார்கள். பண்ணவும் தேவதாசன் ஐயர்: எல்லாரும் காசிக்குப் போகவேண்டியதுதான்; நானும் போயிருக்கிறேன். அந்தக் காசி யேசுவானவர் பிராணத்தியாகமான கொல்கதா மலை; கங்கா தீர்த்தம் இரட்சண்ய மூர்த்தியுடைய திவ்விய மேனியிலிருந்து வடிந்த திரு ரத்தம்; இந்தக் காசி தரிசனமும் கங்கா தீர்த்தமுமடையப் பிரயாணம்பண்ணவேண்டாம்; இந்த இடத்தினின்று மனசினால் தியானித்து விசுவாசித்ததால் போதும்; ஓ எனக்கு நேசமான ரங்கையா தர்க்கம்பண்ணாமல் யேசுகிறிஸ்துவை விசுவாசி; அப்போது ஆண்டவர் உன்னை ஆசீர்வதிப்பார் என்றார். ஆனால் அவன் ஒன்றும் பேசாமல் என்னைச் சுருட்டித் தன் கையிலே வைத்துக்கொண்டு தன் மாமாவுடைய வீட்டுக்குப் போனான். தேவதாசன் ஐயர் தாம நினைத்தபடி சுசீந்திரத்திற்குப் போனார்.

(இன்னும் வரும்.)



# THE BHARATHA.

## பாரதச் சுருக்கம்.

பாரதத்தை வியாசர் முதல்முதல் வட பாஷையிலெழுதினார். அதைத் தமிழில் இயற்றினவர்கள் மதுரைக் கல்விச் சங்கத்தில் சிறந்தவராகிய பெருந்தேவனாரும், வைணவராகிய வில்லிப்புத்தூராரும், மதலம்பேட்டு நல்லாப்பிள்ளையும், தரங்காபுரம் சண்முகக் கவிராயருமாம்.

சந்திர வம்சத்திலே திருதராஷ்டிரன் பாண்டு என்றிருவர் வியாச முனிக்குப் புத்திரராய்ப் பிறந்தார்கள். இவர்களில் திருதராஷ்டிரன் காந்தாரி என்னும் பெண்ணை மணந்து துரியோதனன் துச்சாதனன் முதலிய நூறு பிள்ளைகளைப் பெற்றான். பாண்டு குந்தி மாத்திரை என்னும் இரண்டு மனைவிகளை விவாகஞ்செய்தும், அவர்களோடு வாழக்கூடாதபடி சாபம் நேரிட்டபடியால், குந்தி யமனால் தருமனையும் வாயுவினால் வீமனையும் இந்திரனால் விசயனையும் பெற்றாள். மாத்திரை தேவலோகத்து வைத்தியர்களாகிய அசுவினிதேவர்களால் நகுலன் சகாதேவன் என்னும் இரு மைந்தரை ஈன்றாள். இந்த ஐந்து பேருந்தான் பஞ்சபாண்டவர்கள். இவர்களைப் பாண்டு தான் பெற்ற பிள்ளைகளினும் உற்ற பிள்ளைகளாய்ப் பரிபாலித்து வரும்போது அவனும் மாத்திரையும் மரித்துப்போனார்கள். அப்போது பிரதானிகளும் பிரஜைகளும் சர்வ சம்மதமாய் ஐவருக்கு இராச்சியத்தில் பாதிப் பங்கு கொடுக்கவேண்டுமென்று விரும்பினபடியால், துரியோதனன் ஐவர்மேல் பொறாமைகொண்டு, அவர்களைக் கொன்றுவிடும்படி பலவிதமான உபாயங்கள் செய்தும், ஒன்றும் வாய்க்கவில்லை. ஆதலால் இப்போது அலகபாத் என்னும் முற்காலத்தில் வாரணவதமென்றும் சொல்லப்பட்ட இடத்தில் அரக்கு பஞ்சு மெழுகு அழிஞ்சில் எண்ணெய் இவற்றினால் ஒரு மாளிகை கட்டி, அதற்குள்ளே ஐவரையும் குந்தியையும் வாசம்பண்ண ஏற்பாடு செய்து, ஓரிரவு தீக்கொளுத்திவிடும்படி உத்தரவுபண்ணினான். ஆனால் ஐவர் அந்தச் சற்பனையை அறிந்து, அரக்கு மாளிகைக்குக் கீழிருந்த ஒரு நிலவறை வழியாய் இடும்பை என்னும் ஒரு வனத்திற்குப் போய்ப் பிழைத்தார்கள். இதற்குப்பின் நெடுங்காலமாக நாட்டுப் புறங்களிலே சஞ்சரித்து வரும்போது, துருபதன் என்னும் பாஞ்சால தேசத்து இராஜனுடைய மகளாகிய திரௌபதிக்குச் சுயம்வரமென்று ரூபமாறி வந்த கிருஷ்ணனால் அறிந்து, பிராமணர்களாக வேஷமாறி, பாஞ்சால தேசத்திற்குப் போய், சுயம்வர மண்டபத்

தில் பிரவேசித்தார்கள். அங்கே துரியோதனனும் மற்றும் எல்லா இராஜாக்களும் வந்திருந்தார்கள். ஓயாமல் சுற்றிக் கொண்டிருந்த ஒரு சக்கரத்தின்வழியாய் ஒரே தருணத்தில் ஐந்து அம்புவிட்டு மிகவும் உயரத்தில் வைக்கப்பட்டிருந்த ஒரு மச்சக் குறியை எய்து தரையில் விழாமல் தடுத்துக் கொள்ளுகிற சமர்த்தனையே திரௌபதி மாலையிடுவாள் என்ற ஏற்பாடிருந்தபடியால், துரியோதனனும் அவன் அனுசாரியாகிய கர்னனும் இன்னும் அநேக அரசரும் மச்சக் குறியை எய்யப் பிரயத்தனித்தார்கள். ஆனால் ஒருவராலும் கூடாமற்போயிற்று. கடைசியில் விசயன் அதைச் சங்கேதப்படி எய்தான். திரௌபதி அவனையே மாலையிட்டாள். இதைக் கண்ட துரியோதனன் பொருமையினால் அநேக அரசரைச் சேர்த்து அர்ச்சுனனை எதிர்த்தான். அர்ச்சுனனும் வீமனுமாய் அவர்கள் சேனைகளைச் சர்வ நாசம்பண்ணி அவர்களை யம லோகத்திற்கு அனுப்பப்போகும்போது, அவர்கள் ஓடிப் பிழைத்தார்கள். திரௌபதி ஐவருக்கும் மனைவியானாள். ஆகவும் பிறவிக் குருடனாகிய திருதராஷ்டிரன் ஐவருடைய பெலத்திற்கும், அவர்களுடைய மாமனாகிய பாஞ்சாலனுடைய சேனாசமுத்திரத்திற்கும் அஞ்சி, அஸ்தனாபுரியில் பாதியை ஐவருக்குக் கொடுத்தான். அவர்கள் இப்போதிருக்கிற தில்லி நகரமாகிய இந்திரப் பிரஸ்தத்திலே தங்கள் இராஜதானியை ஸ்தாபித்து, மகா அலங்காரமான அரமனையும் விசித்திர விநோதமான கொலு மண்டபமும் இயற்றி, இராஜ சூயயாகம் செய்து, பெரிய சக்கரவர்த்திகளுக்குச் சமனானார்கள். இதையெல்லாம் பார்த்த துரியோதனன் பொருமை மிஞ்சினவனாய்: பஞ்சவர் பவுஷுகளைப் பார்க்கும்போது என் வயிறு பகீரென்று தீப்பற்றிக்கொள்ளுகிறது. தீயில் குதித்தாலும், கல்லைக் கட்டிக் கடலில் விழுந்தாலும், விஷத்தைக் குடித்தாலும்தான் என் சித்தம் குளிரும் என்று சொல்லி, தன் தகப்பன் மூலமாய் ஐவரையும் திரௌபதியையும் தான் இயற்றின ஒரு புதிய சபாமண்டபத்திற்கு அழைப்பித்துத், தன் மாமனாகிய சகுனியைக் கொண்டு தருமரோடு வஞ்சகச் சூதாடி, ஐவருடைய நாடு நகரங்களையும், சகல பொருட்களையும், ஐவரையும் திரௌபதியையும் ஜெயித்து திரௌபதியை இராஜ சபையிலே துகிலுரிந்து மிகவும் அவமானித்தான். இதற்குப்பின் துரியோதனன் 13 வருஷம் தன் பாகத்தையும் ஐவர் பாகத்தையும் ஆண்டுவரவேண்டுமென்றும், அந்தக் காலத்தில் ஐவர் 12 வருஷம் வனவாசம்பண்ணி ஒரு வருஷம் யாதாவதொரு நாட்டில் ஒருவராலும் அறியப்படாதபடி வாசம் பண்ண வேண்டுமென்றும், இப்படி 13 வருஷமும் கழித்தபின்



துரியோதனன் ஐவருடைய நாடு நகரங்களைக் கொடுத்துவிடவேணுமென்றும் உடம்படிக்கை செய்யப்பட்டது. ஐவர் அப்படியே 13 வருஷ காலத்தையும் கழித்துத் தங்கள் இராச்சியத்தைக் கேட்டபோது, துரியோதனன் அவர்களுக்கு நாடேது, நகரமேது, குடியிருக்க ஒரு வீடுதானும் கொடேன் என்று சொல்லிவிட்டான். ஆதலால் ஐவருக்கும் நூற்றுவருக்கும் குருச் சேத்திரத்திலே 18 நாளாகப் பயங்கரமான போர் நடந்தது. இந்து தேசத்திலுள்ள சகல இராஜாக்களும் இரண்டு பக்கத்திற்கும் துணைப்படை கொண்டு வந்தார்கள். ஐவருக்குக் கிருஷ்ணன், பாஞ்சாலன், வீராட ராஜன் முதலியவர்களும், நூற்றுவருக்கு வீஷ்மன் கர்னன் சல்லியன் முதலாகிய இராஜாக்களும், துரோணர் கிருபர் அஸ்வத்தமா என்னும் வில்லாசிரியரும் துணைகளாயிருந்தார்கள். துரியோதனனும் அவன் தம்பிமாரும் அவன் அனுசாரிகளும் கணக்கில்லாத சேனைகளோடு ஐவருடைய அம்பு தண்டு முதலிய ஆயுதங்களுக்கு இரையானார்கள். தருமமே ஜெயமடைவதுபோல, ஐவரே வெற்றி பெற்றார்கள். தருமர் இராச்சியத்தை எடுத்து, ஆளத் துவக்கி, அஸ்வமேத யாகஞ் செய்து, இந்து தேசமுழுதுக்கும் சக்கரவர்த்தி என்ற பெயரும் பெற்றார். என்றாலும் யுத்தத்திலே தமது பெந்துக்களையும் ஆசிரியரையும் சிநேகிதரையும் கொன்றுவிட நேரிட்டபடியால், கிரீடத்தையும் செல்வத்தையும் ஜீவனையும் வெறுத்து, தம்பிமாரோடும் திரௌபதியோடும் இமய பர்வதத்திலே மோட்ச யாத்திரை செய்தார். தம்பிமாரும் மனைவியும் வழியிலே இறந்துபோனார்கள். கடைசியில் இந்திரன் தோன்றி தருமரைத் தேவலோகத்திற்குக் கொண்டுபோனார். வாசிக்கிறவர்கள் இந்தக் கதையின் பொய் மெய்களைக் கிரகித்துக் கொள்ளவேண்டும்.

## DAVID AND GOLIATH.

## தாவீதும் கோலியாத்தும்.

பெலிஸ்தருக்குள்ளே கோலியாத் என்னும் ஒரு ராச்சதன் இருந்தான். அவனைக் கண்டவர்கள் எல்லாரும் கருடனைக் கண்ட பாம்புபோல பயந்து நடுங்கினார்கள். தேவன் மேல் நம்பிக்கை வைத்திருந்த தாவீது என்னும் வாலிபனோ அவனை அற்பமாய் எண்ணி, தன் சரீர பலத்தால் அல்ல,

விசுவாச பலத்தால் அவனைக் கொன்றான். நமது இஷ்டர்களுக்கு இந்த வேத சரித்திரம் தெரியுமானதால் விபரமாய்ச் சொல்லாமல் விடுகிறோம்.

இந்நாட்டாராகிய நாம் அடக்கி ஜெயிக்கவேண்டிய பல ராச்சதர் உண்டு. துாப் பழக்கங்கள் பலரை இறுகக் கட்டிப் பிடித்திருக்கும் கொடிய சத்துருக்கள்தான். அவைகள் நம்மை ஆட்கொள்ள விடுவோமானால், நமக்கு நோய்களும் துன்பங்களும் உண்டாவது நிச்சயம்.



குடிவெறி ஒரு பலத்த ராச்சதன். இந்தச் சத்துருவினால் உண்டாகும் கெடுதிக்குக் கங்குகரையில்லை. அநேகர் மானத்தையும் தானத்தையும் இழந்திருக்கிறார்கள். வஸ்துக்களை இழந்து, குடும்பங்களை தெருவும் திண்ணையுமாக்கியிருக்கிறார்கள். பலர் தங்கள் சுகத்தைப் பறிகொடுத்து நடபிணமாய்த் திரிகிறார்கள்.

சாதி வித்தியாசம் இன்னொரு ராச்சதன். இந்நாட்டில் இது செய்திருக்கிற தீங்குக்கு கணக்கில்லை. ஜனசமுதாயத்தில் இருக்கவேண்டிய பரஸ்பர அன்பு கடலிலே காயம் உரைத்தாற்போலதான் இருக்கிறது. பிழைப்புக்காகச் செய்யப்படுகிற தொழில்கள் விர்த்திப்படுகிறதில்லை. தாழ்ந்த ஜாதியார் என்று எண்ணப்படுகிறவர்களுக்கு இருக்கும் அறிவு அவமதிக்கப்படுகிறது. தனக்கானவைகளை மாத்திரம் நாடித் தேடும் சுயநயநாட்டம் இதினால் உண்டாகும் பெருங் கெடுதி. மேலும் இது கிறிஸ்து மார்க்க அபிவிர்த்திக்கு இடையூறுமிருக்கிறது.



---

## MISCELLANEOUS.

## நானாவிஷயங்கள்.

**கல்லாதவர்கள்.** மூடவர்கள் ஆடவும் குருடர்கள் அந்த ஆட்டத்தைப் பார்த்து ஆனந்திக்கவும், ஊமைகள் பாடவும் செவிடர்கள் அந்தப் பாட்டைக் கேட்டு மகிழவும் கண்டால் எவ்வளவு ஆச்சரியமோ, அவ்வளவாய் கல்லாதவர்கள் விவேகிகளாயிருப்பதும் ஆச்சரியம்.

**மூடர்கள்.** மூடர்களுக்கு ஞானமோதுதல் செவிடர் காதில் சங்கூதினதுபோலவும், குருடருக்குப் பந்தம் பிடித்ததுபோலவும், கல்லில் மழை பெய்ததுபோலவும், காட்டில் நிலவெறித்தது போலவுமாம்.

**பெண் கல்வி.** பெண் கல்வி பல நன்மைகள் செய்வதோடுகூட, புருஷர் தாசிகள் வீட்டுக்குப் போகிற வழியை அடைக்கும் பலமான வேலியாகவுமிருக்கிறது.

**பத்தியும் புத்தியும்.** சமுத்திரத்தைக் கிணறு விழுங்கினது போல, பூமியின் பெரும்பாகத்தைச் சிறிய தேசத்தாரான அங்கிலேயர் ஜெயித்தது எவற்றால்? பத்தியினாலும் புத்தியினாலுந்தான்.

**சிசு மணம்.** சிறு பிள்ளைகளுக்கு மணமுடித்தல் பால்குடி பிள்ளைகளுக்குப் பலவித உருசிகரமான பலகாரங்களையும் மச்சமாம்சங்களையும் கொடுப்பது போலவும், நீந்தத் தெரியாதவர்களைக் குளத்தில் தள்ளுவது போலவும், குதிரை ஏற அறியாதவர்களைக் கடிவாளமில்லாத் குதிரைகளில் ஏற்றுவதுபோலவு மிருக்கிறது.

**அரிய காரியம்.** அண்ட கோளங்களை அணுவில் அடைப்பதும், ஆகாயத்திற்கு மையம் காண்பிப்பதும், நரிவாலைக் கொண்டு கடலாழம் பார்ப்பதும் எவ்வளவு அரிதோ, அவ்வளவாய் கடவுளுடைய கடந்த தன்மையை அறிவதும் அரிதாயிருக்கிறது.

**சரீர வீடு.** ஆத்தும அரசன் குடியிருக்கும் பொருட்டு, இரண்டு கால் நாட்டி, இரத்தமாகிய நீர் சேர்த்து, மாம்சச் சுவரெழுப்பி, எலும்புக்கழிகளைப் பரப்பி, நரம்புக் கயிறுகளாற் கட்டி, தோலாகிய கூரை வேய்ந்து, ஒன்பது வாயிலிட்டுக் கட்டப்பட்டிருப்பதென்ன? சரீரம்.

## SUMMARY OF NEWS.

## சமாசாரத்திரட்டு.

சென்ற மீ 24-ம் வ புதுக் கவர்ணர் ஜெனரல் கல்குத்தா வந்து சேர்ந்தார். முந்தின கவர்ணர் ஜெனரல் 27-ம் வ இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். கல்குத்தாவிலுள்ளவர்கள் அவரை நினைவுகூரும்படி ஒரு பிரதிமை எழுப்ப யோசிக்கிறார்கள். சென்னை ராஜதானியின் தென் பாகம் முழுதிலும் விஷபேதி மும்முரமாய் நடமாடுகிறது. மதுரையிலே அமெரிக்க மிஷன் சம்பந்தமாய் 47 வருஷ காலம் உழைத்துவந்த சான்றலர் போதகர் அந்நோயினால் மரித்துப் போனார். அமெரிக்கத் துரைமகன் ஒருவர் இப்போது இந்தியாவிலே யாத்திரைசெய்கிறார். உலகத்திலே அவருக்குச் சமனான தனவான் இல்லையாம். அவர் மகா அலங்காரமான தமது சொந்தக் கப்பலிலேயே பிரயாணஞ்செய்கிறார். கல்குத்தாவுக்குப் போனபோது கவண்மென்ற் மண்டபத்திலே தாமதித்தார். சென்னையில் மின்சார இருப்புப்பாதை வேலை ஆரம்பித்திருக்கிறார்கள். அது அந்நகரத்திற்குப் பெரிய நன்மையாயிருக்கும். வட இந்தியாவிலே ஒரு மாஜிஸ்திரேற் ஒரு மனுஷனை அவன் வாசிக்கப் படிக்கும்வரையும் சிறையிலிருக்கத் தீர்ப்புப் பண்ணினார். கல்வி சாமர்த்தியமுள்ள வேறொருவனையும் மேற்சொன்னவனை வாசிக்கப் படிப்பிக்கும்வரையும் காவலில் வைத்தார். இருவரும் தங்கள் வேலையை 3 வாரத்திற்குள் முடித்துவிட்டு விடுதலையடைந்தார்கள். ஆமீர் அரசன் இங்கிலாந்துக்குப் போக யோசித்திருப்பதாக வதந்தியுண்டாகிறது. திருவனந்தபுரத்துச் சங். மெற்றியர் ஐயர் இங்கிலாந்தைச் சேர்ந்த ஏஸ்ற்றிங்ஸ் என்னும் இடத்தில் சென்ற டிசெம்பர் மீ 25-ம் வ தேகவியோகமானார். அவர் 35 வருஷ காலமாக திருவிதாங்கோட்டு மிஷனில் உழைத்து வந்தவர்; பெரிய மிஷனரி; பேர்பெற்ற படிப்பாளி. இங்கிலாந்திலே புதிதாய் அநேக யுத்தக்கப்பல்கள் கட்ட யோசிக்கிறார்கள். பிரான்சிலே மந்திராலோசனைச் சபை கூடியிருக்கும்போது ஒருவன் சபையின் மத்தியிலே ஒரு சட்டிப் பீரங்கியை எறிந்துவிட்டான். அநேகர் பெருங் காயமடைந்தார்கள். அந்தத் துரோகி மரணாக்கினைக்குத் தீர்ப்புப் பெற்றான்.

இது நாகர்கோவில் லண்டன் மிஷன் ஆச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

